REGD. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு



**ஒழுக்கம்**

மனிதன் செல்வத்தை இழந்தாலும், உடல் நலம் குறைந்தாலும் அதனைப் பெற்று விட முடியும். ஆனால், ஒழுக்கத்தை இழந்தால் எல்லாவற்றையும் இழந்து விட நேரிடும்.

-அண்ணல் காந்தி


# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்


**மாற்றம்**

காலத்திற் கேற்றபடி கருத்திலே மாற்றம் வேண்டும் அப்படி மாறாத சமுதாயம் மறைந்து விடும்.

-பேரறிஞர் அண்ணா



மலர்: 3 (●) சென்னை 19—1—1979 வெள்ளி (★)❋●❋(★) வெளியீடு 20—1—1979 சனி (●) இதழ்: 93

## ★ முருகையன் கொலை: மத்திய போலீஸ் விசாரிக்குமா?

## ★ புதுவை தமிழ் நாட்டுடன் இணைந்தே தீரும்!

## ★ மத்திய மந்திரி சபையில் மாறுதல் உண்டா?

# புரட்சித்தலைவருடன் பேசியது என்ன?

## பிரதமர் மொரார்ஜி தேசாய் பேட்டி

**சென்னை, ஜன. 19-இந்தியை எதிர்த்து நடத்தப்படும் கிளர்ச்சிகள் செத்த குதிரையை அடிப்பது போன்றது என்றும், புதுவை தமிழ்நாட்டுடன் இணைந்தே தீரும் என்றும் பிரதமர் மொரார்ஜிதேசாய் இன்று சென்னையில் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறினார்.**

தமிழக நிகழ்ச்சிகளை முடித்துக் கொண்டு பிரதமர் தேசாய் இன்று டெல்லி புறப்பட்டார்.

பிரதமர் மொரார்ஜி தேசாய் இன்று காலை கிண்டி ஆளுநர் மாளிகையில் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார்.

இந்தித் திணிப்பு பற்றிய கேள்விகளுக்குப் பதில் அளிக்கையில் பிரதமர் கூறியதாவது:

இந்தியைக் கற்றுக் கொள்வதுதான் எதிர் காலத்துக்கு நல்லது என்றைக்காவது ஒரு நாள் எல்லோரும் இந்தியைப் படித்தே ஆகவேண்டிய காலம் வந்தே தீரும்.

இந்தித் திணிப்பு இல்லை இந்தித் திணிப்பை எதிர்ப்போம் என்று கூறுவது செத்துப்போன குதிரையை சவுக்கால் அடிப்பதைப் போன்றது என்றார் பிரதமர்.

தமிழகத்தில் பல்வேறு கட்சிகள் இந்திப் பிரச்னையில் ஒன்றாக உள்ளன என்பதை ஒரு நிருபர் சுட்டிக் காட்டினார்.

கட்சிகள் அணி சேருவது இயற்கை. புதுவை இணைப்பு பிரச்னையில் எல்லா கட்சிகளும் ஒன்று சேரவில்லையா? என்று பிரதமர் திருப்பிக்கேட்டார்.

இந்தியை படிக்க வேண்டும் என்று சட்டரீதியான கட்டாயம் இல்லை ஆனால் தேசப்பற்றின் கட்டாயம் காரணமாக இந்திபடிக்க வேண்டும். தேசப்பற்றுள்ளவர்கள் இந்தி படிப்பார்கள் என்று தேசாய் மேலும் கூறினார்.

ஜனதா மந்திரி சபை மாறுதல் குறித்த கேள்விகளுக்கு பிரதமர் பதில் அளிக்க மறுத்துவிட்டார்.

கிளர்ச்சிகளை சமாளிக்க என்னிடம் போதிய ஆற்றல் இருக்கிறது எதையும் முறையாக செய்யவே நான் விரும்புகிறேன் என்றார் பிரதமர்.

### முருகையன் கொலை

கம்யூனிஸ்ட் எம் பி முருகையன் கொலை பற்றி மத்திய போலீஸ் விசாரிக்குமா என்று நிருபர்கள் கேட்டனர்.

இது பற்றி தமிழக முதல்வரைக் கேளுங்கள் என்று பிரதமர் பதிலளித்தார்.

### புதுவை இணைந்தே தீரும்

புதுவை மாநிலம் தமிழ் நாட்டுடன் இணைந்தே தீரும் இல்லா விடில் புதுவை புதுவையில் ஸ்திரமான ஆட்சி அமையாது என்று திட்டவட்டமாக பிரதமர் தெரிவித்தார்.

புதுவை இணைப்பு பற்றிய பிரச்னை பரிசீலனையில் இருக்கிறது. இணைவது மிகவும் அவசியம்,

"புதுவை மக்களின் கருத்தை அறிந்த பிறகுதான் இணைப்பு பற்றி முடிவு செய்யப்படும் என்று நான் யாரிடமும் உறுதி கூறவில்லை என்று பிரதமர் மறுத்தார்,

[புதுவை மக்களின் கருத்துக்கு விரோதமாக நடக்க மாட்டோம் என்று பிரதமர் உறுதி அளித்திருப்பதாக பிரதமரை சந்தித்த பிறகு நேற்று புதுவை ஜனதாத் தலைவர் அன்சாரி துரைசாமி அறிக்கை விட்டிருந்தார்]

கேள்வி: புதுவை மக்களிடம் இணைப்பு பற்றி வாக்கெடுப்பு நடத்தப்படுமா?

பிரதமர்: அது என்ன வாக்கெடுப்பு? வாக்கெடுப்பு நடத்துவதாக நான் யாருக்கும் வாக்குறுதி தரவில்லை வாக்கெடுப்பின் முடிவு எப்படி இருக்கும் என்பது எனக்குத் தெரியும்

கேள்வி: எல்லா கட்சிகளும் புதுவை இணைப்பை எதிர்ப்பதில் கூட்டு சேர்ந்துள்ளனவே?

பிரதமர்; இந்தக் கட்சிகள் எப்போதும்தான் கூட்டு சேருகின்றன.

கேள்வி: பெரும்பான்மை மக்கள் கருத்தை அறியவேண்டாமா?

பிரதமர்: பெரும்பான்மையா? எது பெரும்பான்மை? வன்முறையை பெரும்பான்மை ஆதரித்தால் அதைக் கூட ஏற்க வேண்டுமா?

கேள்வி: மக்கள் விருப்பத்தை மீறி புதுவை இணைக்கப்பட்டால் தொடர்ந்து கிளர்ச்சி நடக்குமே!

பிரதமர்: எந்த முடிவையும் நான் அமல் படுத்திக் காட்டுவேன்! இல்லையென்றால் என்னால் அரசாங்கத்தை எப்படி நடத்த முடியும

(I can enforce any decision, other wise I cannot run the Government.)

முன்னதாக பிரதமரும் புரட்சித்தலைவரும் ஆளுநர் மாளிகையில் இருபது நிமிடங்கள் தனியே உரையாடிக் கொண்டிருந்தனர்

முதலமைச்சருடன் என்ன பேசினீர்கள் என்று நிருபர்கள் பிரதமரிடம் கேட்டனர்

"முதல்வருடன் பேசியது என்ன என்பதையெல்லாம் நிருபர்களிடம் சொல்வேன் என்று எதிர்பார்க்கக் கூடாது" என்று பிரதமர் பதில் அளித்தார்

### முதல்வர் பேட்டி

பிரதமரைச் சந்தித்து விட்டு வெளியே வந்தபோது முதல்வர் புரட்சித்தலைவரை நிருபர்கள் சூழ்ந்து கொண்டு பிரதமரிடம் என்ன பேசினீர்கள் என்று கேட்டனர் இது மரியாதை சந்திப்பு' என்று முதல்வர் பதில் அளித்தார்.

### டெல்லி புறப்பாடு

தமிழகத்தில் இரண்டு நாள் நிகழ்ச்சிகளை முடித்துக் கொண்டு பிரதமர் மொரார்ஜி தேசாய் இன்று காலை தனி விமானம் மூலம் புதுடெல்லி புறப்பட்டார்

அவரை ஆளுநர், முதல்வர் புரட்சித்தலைவர், அமைச்சர்கள், உயர் அதிகாரிகள் ஆகியோர் விமான நிலையத்தில் வழி அனுப்பி வைத்தனர்.

கம்யூனிஸ்ட தலைவா

### டாங்கேக்கு மாரடைப்பு

பம்பாய், ஜன. 19-கம்யூனிஸ்ட் தலைவர் எஸ் ஏ டாங்கேக்கு திடீர் என்று மாரடைப்பு ஏற்பட்டது கடுமையான இதய நோய் காரணமாக மாரடைப்பு ஏற்பட்டிருப்பதால் டாங்கே நேற்று பம்பாய் மருத்துவமனையில் தீவிர சிகிச்சைப் பிரிவில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

அவர் இன்னும் ஒருவார காலம் மருத்துவமனையில் தங்கி இருக்க வேண்டும் என்று மருத்துவர்கள் தெரிவித்தனர்.

❋

### அமைச்சர் பண்ருட்டி டெல்லி சென்றார்

சென்னை, ஜன. 19-மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் நேற்று (வியாழன்) மாலை விமானம் மூலம் டெல்லி சென்றார்.

டெல்லியில் இன்றும் நாளையும் நடக்கும் ஆண்டுத் திட்ட விவாதத்தில் அவர் கலந்து கொள்கிறார்.

20-ந்தேதி மாலை 6-30 மணிக்கு டெல்லியிலிருந்து விமானத்தில் புறப்பட்டு சென்னை திரும்புகிறார்.

❋

### ஜப்பான் கலாச்சார ஆய்வுக்குழு சென்னை வருகிறது

சென்னை, ஜன. 19-ஆறு உறுப்பினர்கள் அடங்கிய ஜப்பான் கலாச்சார பரிவர்த்தனை ஆய்வுக் குழு சென்னை வருகிறது.

நாளை (சனிக்கிழமை) ஜப்பான் கலாச்சாரத் துறை துணைஇயக்குநர் ஜெனரல் சி ஹிரோகா தலைமையில் இந்தக்குழு சென்னை வந்து சேருகிறது. இருநாடுகளுக்கிடையே கலாச்சாரபரிவர்த்தனை திட்டங்களை வலுப்படுத்துவதற்கு தேவையான எல்லா நடவடிக்கைகள் குறித்து இந்த குழு ஆய்வு செய்யும்,

ஆளுநர் பட்வாரியையும் பல்கலைக்கழக துணைவேந்தர்களையும் இந்தக் குழுவினர் சந்தித்துப் பேசுவர்,

### சென்னை உயர்நீதி மன்றத்துக்கு புதிய நீதிபதிகள்

**புதுடெல்லி, ஜன. 19- சென்னை உயர்நீதி மன்றத்துக்கு 7 நிரந்தர நீதிபதிகளையும், 2 கூடுதல் நீதிபதிகளையும் நியமிக்க மத்திய அரசு முடிவு செய்துள்ளது.**

தமிழக அரசுடன் கலந்தாலோசித்து மத்தியஅரசு இந்த முடிவை மேற்கொண்டது ஏற்கனவே உயர்நீதி மன்றத்திலுள்ள 4 கூடுதல்நீதிபதிகள் நிரந்தர நீதிபதிகள் ஆக்கப்படுவார்கள் மற்ற 3 நிதிபதிகள் மட்டும் நியமிக்கப்படுவார்கள்

நிரந்தரமாக நியமிக்கப்படும் 4 நீதிபதிகள் பெயர்கள் பின்வருமாறு:

நீதிபதிகள் முகமது அப்துஸ் சத்தார் சயீத், சத்தியதேவ், நயினார் சுந்தரம், மகேஸ்வரன் நியமிக்கப்பட இருக்கும் 3 நீதிபதிகள் வருமாறு: பி என் வேணு கோபால், எஸ் பி சுவாமிக்கண்ணு, வி ரத்தினம்

கூடுதல் (அடிஷனல்) நீதிபதிகளாக நியமிக்கப்பட இருப்போர் ஆர் செங்கோட்டு வேலன். கே என் சண்முகம்

ஐயோ! பாவம்!

### அலைஓசை புளுகு அம்பலம்

பச்சைப் பொய்யைக் கூறி பத்திரிகை வர்த்தகம் நடத்துகிறது "அலை ஓசை" என்பதற்கு மற்றும் ஒரு 'சாம்பிள்'

"கொலையுண்ட முருகையன் எம்பி வீட்டுக்கு பிரதமர் தேசாய் நேரில் சென்றார் .பிரதமர் தேசாயைக் கண்டஉடன் கதறி அழுதார்கள் தேசாயின் கண்களும கலங்கின"

இப்படிச் செய்தி வெளியிட்டு இருக்கிறது அலைஓசை

"ஆனால் நடந்தது என்ன? பிரதமர் தேசாய் நேற்று சிதம்பரத்துக்கு முருகையன் வீட்டுக்குப் போய் ஆறுதல் கூறுவதாக இருந்தார் ஆனால் மழை காரணமாக அங்கு போகவில்லை" என்று செய்தி வெளிவந்திருககிறது உண்மையை அறியாமல் பொய்ச் செய்தி வெளியிட்டு திருடனுககு தேள் கொட்டிய மாதிரி 'அலைஓசை' முழிக்கிறது. அய்யோ பாவம்!

### பிரதமருடன் புரட்சி தலைவர் முக்கிய பேச்சு

சென்னை, ஜன 19-கிண்டி ஆளுநர் மாளிகையில் பிரதமர் மொராஜிதேசாயை தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் இன்று காலை சந்தித்தார் பிரதமரும் தமிழக முதல்வரும் சிறிது நேரம் தனியாக பேசிக்கொண்டிருந்தனர்

★தாத்தையங்கார் பேட்டை விவசாய

### சங்க கூட்டம் தள்ளிவைப்பு

திருச்சி, ஜன. 19-தாத்தையங்கார் பேட்டையில் 20ந்தேதி சனியன்று நடைபெற இருந்த அண்ணா விவசாய சங்க அமைப்புக் கூட்டம் தள்ளி வைக்கப்படுகிறது மாற்றுத்தேதி பின்னர் அறிவிக்கப்படும்

★கோவை மாநாட்டுக்கு விசேஷ பஸ்கள்:

### சேரன் போக்குவரத்து கழகம் ஏற்பாடு

கோவை, ஜன. 19-கோவையில் இந்தமாதம் 24 25 தேதிகளில் இந்திதிணிப்பு எதிர்ப்பு மாநாடு, வீரவணக்க நாள் மாநாடு நடைபெறுவதை யொட்டி சேரன் போக்குவரத்துகழகம் விசேஷ பஸ்களுக்கு ஏற்பாடு செய்துள்ளது.

கோவைமாவட்டம் முழுவதுமிருந்தும் மாநாடு நடைபெறும் இடத்துக்கு விசேஷ பஸ்கள் விடப்படுகிறது.

மாநாட்டுக்கு வரும்மாணவர்களும்கழகத்தோழர்களும் குடும்பத்தோடு கழகக்கொடிகளுடன் அணி திரளுமாறு அமைச்சர் குழந்தைவேலு கேட்டுக் கொண்டுள்ளார்.

### வார மலர்

(2 ம் பக்கம்)



## 10 ஆயிரம் நூல் நூற்கும் பெண்களுக்கு கூலி உயர்வு

சென்னை, ஜன, 19-கிராமங்களில் ராட்டையில் கதர் நூல் நூற்கும் பெண்களுக்கு கூடுதல் வருமானம் கிடைக்க கூலி உயர்த்தப்பட்டுள்ளது என்றுகைத்தறி மற்றும் கதர் வாரியத் தலைவரும் அமைச்சருமான சுப்புலட்சுமி தெரிவித்தார்.

இதுபற்றி அமைச்சர் சுப்புலட்சுமி கூறியதாவது:

தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியத்தின் கீழ் 308 கிராமிய நூற்பு நிலையங்கள் இருக்கின்றன,

10 ஆயிரத்து 164 பெண்கள் இவைகளில் பணியாற்றுகிறார்கள். இவர்கள் கதர் நூல் நூற்று தினசரி சராசரியாக இரண்டேகால் ரூபாய் கூலி பெறுகிறார்கள்

பொங்கல் தினத்தில் இருந்து இவர்கள் நூற்கும் ஒவ்வொரு சிட்டத்துக்கும் நான்கு பைசா வீதம் கூலி உயர்த்தப் படுகிறது இதன்படி ஒவ்வொருவருக்கும் நாளொன்றுக்கு 75 பைசா அதிக வருமானம் கிடைக்கும் இதன் மூலம் கதர் வாரியத்திற்கு ஆண்டுக்கு 14 லட்சம் ரூபாய் அதிகமாகசெலவாகும்

இவ்வாறு அமைச்சர் சுப்புலட்சுமி தெரிவித்துள்ளார்

**திருவிடை மருதூரில் நடந்த திருவாசகக் கருத்தரங்கில் பிரதமருக்கு நெல் தேர் வழங்கப்பட்டது.**

### பிரதமரிடம் மார்க்கபந்து முறையீடு

கிண்டி ஆளுநர் மாளிகையில் பிரதமர் மொரார்ஜி தேசாயை உழைப்பாளர்முன்னேற்றக் கட்சி சார்பில் மார்க்கபந்து எம் எல் ஏ தலைமையில் ஜி தியாகராசன் ஆர் சந்திரன் எம் எல் ஏ, நக்கீரன், ஆர் ராமன் ஆகியோர் அடங்கிய தூதுக்குழு இன்று காலை சந்தித்தது பிற்பட்டோருக்கு அதிக இடங்கள் ஒதுக்கீடு செய்ய சட்டரீதியான ஏற்பாடு தேவை என்று தூதுக்குழுவினர் பிரதமரிடம் வலியுறுத்தினர்.

# ஒரு குறள் ஒரு சிறுகதை

[ப. உ. ச.]

வீரம் கொப்பளிக்கும் பாடல்களைப் புனையும் வல்லோன் - நல்லோன் எனப் பலராலும் புகழப்பட்ட எழினி ஆழ்ந்த சிந்தனையில் கண்களை மூடியவாறு வீற்றிருந்தான். 'எழினி' எனும் குரல் கேட்டு சிந்தனை கலைந்து கண்களைத் திறந்தான், எதிரில் அவனிடம் தணியாத அன்புகொண்ட நண்பன் புலவர் பெருங்கோவன் நிற்கக் கண்டான்.

இருவரும் அடுத்த விநாடியே தழுவி' நின்றனர். நெடுநாட்களுக்குப் பிறகு ஏற்படும் சந்திப்பல்லவா? ஒருவர் முகம் ஒருவர் பார்த்தனர். பிறகு இருவரும் உட்கார்ந்தனர்.

''எழினி, எப்படியப்பா இருக்கிறாய்?'' என்றார் புலவர்

''புலவரே, நலமாயிருக்கிறேன் என்றான் எழினி.

''வளநாட்டை விட்டு கொல்லி நாடு ஏன் வந்தாய்?'' புலவர்

எழினி புன்னகை பூத்தான்

''எழினி உண்மையைச் சொல். கொல்லி நாட்டானிடம் கையூட்டுப் பெற்று வந்ததாக வளநாட்டான் சொல்கிறானே!''

எழினி வாய்விட்டுச் சிரித்தான்

''ஏனப்பா சிரிக்கின்றாய்?''-புலவர்

''புலவரே! சிரிக்காமல் என்ன செய்வது? குலமகளின் கற்பை விலை மாது சந்தேகித்தால் சிரிக்கத்தானே தோன்றும். கொல்லிநாட்டான் வறியவர்களுக்கு வாரி வழங்குவானே தவிர, எவரையும் 'கையூட்டு தந்து' விலைக்கு வாங்க மாட்டான். புலவரே! இந்த எழினி ஏழைதான் ஆனால் விலைபோகும் சந்தைப்பொருளல்ல.

'எழினி உன்குணம் நானறிவேன். ஆனால் வளநாட்டான் நீ கையூட்டுப் பெற்று வந்துவிட்டதாகப் பிரச்சாரம் செய்கிறான். மேலும் நீ இடைத்தரகனாக மாறி வளநாட்டைக் காட்டிக்கொடுக்கும் செயலைச் செய்து வந்தாயாமே''

''இடைத்தரகா?... அது என் குலம் அறியாத தொழில்''

''எழினி கொல்லி நாட்டுப் பெருமக்கள் மத்தியில் அவனைப்பற்றி இரண்டொரு வரிகள் புகழ்ந்துவிட்டு வளநாட்டானை வசைபாடுகிறாயாமே உன் 'வசை இசை' கேட்டு கொல்லி நாட்டானும் அவன் மக்களும் ஏற்றுக் கொள்ளவில்லையாமே உன்னை வெறுக்கிறார்களாமே''

'அப்படி கதை அளந்து காலந் தள்ளுதல் வளநாட்டாருக்கு வாடிக்கையாகி விட்டது கொல்லி நாட்டானை வசைபாடச் சொல்லி வற்புறுத்தியதால்தானே வளநாட்டானுக்கும் எனக்கும் வேற்றுமை வளர்ந்தது. புலவரே! புகழாரம் சூட்டுவோருக்குப் பொன் ஆரம் சூட்டுவது வளநாட்டாரின் தர்பாரில் அன்றாட நிகழ்ச்சிகள் கொல்லி நாட்டில் பொற்காசு புகழ்ந்தாலும் கிடைக்காது மாற்றாரை இகழ்ந்தாலும் கிடைக்காது. ஆனால் கொல்லி நாட்டான் திக்கற்றவர்களுக்குத் துணையாவான். பசித்திடும் வயிற்றுக்கு உணவளிக்கும் அட்சய பாத்திரம் அவன் கைகள்.''

''அப்படியா வளநாட்டானை வசைபாடினால் முதலிடம் தரும் பண்புடையவன் கொல்லி நாட்டான் என்றல்லவா சொல்கின்றான்''

''புலவரே! கொல்லிநாட்டானிடம் தோற்றுப்போய் ஆதங்கப்பட்டுக்கொண்டிருக்கும் வளநாட்டான் தன்னைப் போல் இவரையும் நினைக்கின்றான் போலும்?'

''எழினி! உயர்பதவிபெறத்தான் நீ இப்படியொரு கூத்து நடத்துகிறாய் என்று வளநாட்டான் எல்லோரிடமும் சொல்கிறான்''

'புலவரே! நான் எதையும் எதிர்பார்த்து இங்கே வரவில்லை. எனவே எனக்கு ஏமாற்றம் இருக்கப் போவதில்லை இடைத்தரகன்-கையூட்டுப் பெற்றவன் வசை இசைபாடுவோன் உயர் பதவி எதிர்பார்ப்போன் ஏமாற்றமடைந்தோன்- இவ்வளவையும் பார்க்கும்போது வளநாட்டான் கொல்லி நாட்டானிடம் பெற்ற தோல்வியால் கேட்போர் பலரும் விரும்பத்தகாத, வெறுப்பு கலந்த பயனில்லாத வார்த்தைகளைப் பேசுகிறார் போலும் சொல்லுங்கள் அவன் பகைவர்கள் மட்டுமல்ல, அவனைச் சார்ந்துள்ளோர் கூட இகழ்ந்துதான் பேசுவார்கள்''

''எழினி நீ சொன்ன இதே கருத்தை வள்ளுவர்

பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரும் எள்ளப்படும்''

என்று அழகாகக் கூறியுள்ளார்

''புலவரே! வள்ளுவருக்கு அந்தப் பெருமை வருவதைக்கூட வள நாட்டான் தாங்கமாட்டான், வாருங்கள் உண வருந்தலாம்'' என்று புலவரை அழைத்துச் சென்றான். எழினி,

# அண்ணா வாரமலர்

## கல்லும் மலரும்

அ. பொ. நாராயணன்

அரைகுறை இருளில் அவளைப் பார்த்தான். மாட்டுத் தொழுவம் பக்கத்தில் சென்றபோதுதான் அவள் யார் என்று தெரிந்தது.

ஆம். தன் தந்தையைக் கொன்றவனின் மகள். தந்தை கொல்லப்பட்ட அன்று அவளும் தன் ஊருக்கு வந்திருந்தாள்.

வையாபுரியின் தந்தை கொல்லப்பட்டதை மகிழ்ச்சியுடன் திருவிழாவாக நடத்தியவள் அவள் என்று அவனுக்குச் சொல்லப்பட்டது.

அவளை அவன் தனது எதிரிகள் பட்டியலில் சேர்க்காவிட்டாலும், ஒரு பெண்ணுக்கு இவ்வளவு 'திமிரா' என்ற எண்ணம் வையாபுரியனத்தில் இருக்கத்தான் செய்தது. எதிரி கும்பலைச் சேர்ந்த நபர் என்று தெரிந்தாலே தீர்த்துக் கட்டுவதற்கு, இடுப்பில் உள்ள கத்தியை எடுக்கும் அவனுக்கு சந்தர்ப்ப சூழ்நிலைகள் மோக வெறியையே ஏற்படுத்தியது.

அவளால் வையாபுரியை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை.

குஞ்சம்மாள் பேரழகி என்று சொல்ல முடியாவிட்டாலும், தளதளவென்ற உடம்பு. இரண்டு குழந்தைகள் பெற்றிருந்தாலும் உடற்கட்டில் இளமைத் துடிப்பு சதிராடியது.

நடுக்கத்தின் நடுவே அவள் அந்த மாட்டுத்தொழுவம் பக்கத்தில் வந்து நின்றாள். வீட்டுக்காரன் வெளியூர் போய் இருக்கிறான். யாரோ ஒரு வாட்டசாட்டமான ஆள் கிடைத்திருக்கிறான் என்று நினைத்துக் கொண்டாள்.

மாட்டுத் தொழுவம் சற்று இருள் கப்பி இருந்தது. அங்கே அவன் முன் நின்று கொண்டு தூங்கி எழுந்த நிலையை மாற்ற கைகளை உயர்த்திச்சோம்பல் முறித்தாள். அவன் தழுவிக்கொள்ள பச்சைக்கொடியாக அந்தச் சோம்பல் முறிப்பு அமைந்தது!

''நீ குஞ்சம்மாதானே?''

''ஆமாம்... உங்களுச்கு எப்படித் தெரிஞ்சுது...''

''பக்கத்து ஊர் தான் எனக்கு. ஒன்னைப் பலதடவை பார்த்திருக்கேன்..''

''சரி...சரி...பேசவேண்டாம்.,. மாமியாரு முளிச்சுக்குவாங்க''

பேச்சு முடிந்தது.

ஒரு மூலையில் குவிந்து கிடந்த சோளத் தட்டைப் பரப்பில் இருவரும் சாய்ந்தனர்.

அரை நாழிகை கழித்து இருவரும் எழுந்தனர் அவளுக்குக் களைப்பாய் இருந்தது.

எழுந்து நின்ற அவள் தோளில் கைவைத்தவாறே தன்னைப்பற்றிச் சொல்லலானான்,

அவன் யார் என்பதைத் தெரிந்ததும் சற்றைக்கு முன்பிருந்த திகைப்பைவிட அதிகமான அதிர்ச்சிக்கு ஆளானாள்.

''பயப்படாதே. ஒன்னை நான் இப்போ ஒன்றும் பண்ணப்போறதில்லே''

''அப்படீன்னா?''

''பெறகு ஒருநாள் வந்து கவனிச்சுக்கிறேன்''

நெஞ்சில் கை வைத்தபடி ''அய்யோ'' என்று பதறியபடி நின்றிருந்தாள்.

வையாபுரியின் கொலைவெறியை அணு அணுவாகக் கேள்விப்பட்டவள் அவள். தன் குடும்பத்தில் பெரும்பகுதியைத் தீர்த்துக் கட்டிய பயங்கர மிருகம் அவன் என்பதை உணர்ந்தவள் அவள்.

தனக்கு ஏதாவது ஆகிவிடுமோ என்று அவள் பதறிக் கொண்டிருப்பதற்குள் அவன் அங்கிருந்து புழக்கடை வழியாக வெளியேறினான். கூச்சல்போட முடியாத நிலையில் மவுனித்து அவள் வீட்டுக்குள் நுழைந்தாள்.

கூச்சல் போட்டு அக்கம் பக்கம் உள்ளவர்களிடம் சொல்லி வையாபுரியைப் பிடிக்கச்சொல்லி போலீசில் ஒப்படைக்கலாமே, பரிசு கிடைக்கும் என்பதால் பிடிப்பதற்கும் ஆள் சேருமே.

- அவள் மனம் சிந்தித்தது. என்றாலும் ''அவன் இங்கே வந்து என்ன செய்தான்'' என்று யாராவது கேட்டுவிட்டால்...

...சே... சே... வேண்டாம்.

சிறிது நேரத்தில் அருர் வீதிகளில் போலீஸ் ஜீப்கள் புழுதி மேகம் கிளப்பியபடி ஓடிக்கொண்டிருந்தன. வையாபுரியைப் பிடிப்பதற்கு அத்தனை பரபரப்பு!

''வையாபுரி வந்தானும். வையாபுரி வந்தானும்'' என்று சாலைகளில் கூடிநின்ற மக்கள் பேசிக் கொண்டார்கள். அத்தனை பிரபல்யம் அவன்!

தோட்டக்காடுகள் வழியாக ஓடிவிட்ட அவனைப் பிடிப்பது போலீசுக்கு அவ்வளவு சுலபமாக இல்லை.

''இந்த வழியாகத்தான் போனான்'' என்று திசையைக் காட்டிக் கொடுப்பதற்குக்கூட குஞ்சம்மாள் மனம் கூசியது.

★ ★ ★

பாஞ்சாலை சரியாகச் சாப்பிடாமல் துணையை நினைத்துக் கொண்டே உருகினாள்.

கண்டிப்பாகத் தன் வீட்டுக்கு தங்கை பாஞ்சாலையைத் தேடி வருவான் என்ற நம்பிக்கை கருப்பசாமிக்கு இருந்தது.

தன் மீது வையாபுரிக்குக் கொள்ளை ஆசை என்பதை பாஞ்சாலை உணர்ந்தவள் தான். அவனை வசியம் பண்ணும் ஆயகலைகள் தனக்குத் தான் தெரியும் என்ற நம்பிக்கையும் அவளுக்கு இருந்தது. என்றாலும் போலீசில் அவன் மாட்டிக் கொண்டால் என்ன செய்வது என்று திகைத்தாள்!

★ ★ ★

காடுமேடு சுற்றி அலைந்த வையாபுரிக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. அந்தக்காடுக் காகத் துன்பங்களை வரவழைத்துக் கொண்டவனுக்குச் சொந்த புத்தியும் பறி போய்விடுகிறது.

சரி எதற்கும் பாஞ்சாலை வீட்டுக்குப் போய்ப் பார்ப்போம் என்ற முடிவுக்கு வந்தான்.

அந்த ஊருக்கு அவன் நடந்து போய்ச் சேருவதற்குள் இரவு 9 மணி ஆகிவிட்டது! மின்விளக்கு காணாத அந்த குக்கிராமம் அதற்குள் அடங்கிப் போய்விட்டது. அங்கும் இங்குமாகக் கேட்டு பாஞ்சாலை வீட்டை அடைந்தான்.

மகிழ்ச்சிப் பெருக்கோடு வையாபுரியை வரவேற்றாள் அவள்.

தன் அண்ணன் கருப்பசாமி தண்ணி போட்ட நிலையில் எப்போ வருவான் என்று சொல்ல முடியாது என்று தனது ஆசை நாயகனிடம் அவள் தெரிவித்தாள்.

அண்ணனுக்காக வைத்திருந்த மான்கறிக் குழம்பை வையாபுரிக்குப் போட்டாள். சோர்ந்து வந்தவனுக்கு கறி முட்டை எல்லாம் கிடைத்தது. ஒருவகையாகச் சாப்பிட்டு முடித்தபிறகுதான் கை கால் எல்லாம் தூசு படிந்திருந்தது தெரிந்தது.

கொல்லைப்புறத்தில் ஒரு பானையில் தண்ணீர் கொண்டு போய் குளிக்கத் துவங்கினான். பாஞ்சாலையே அவனுக்குத் தண்ணீர் ஊற்றிவிட்டாள்

முருக்கேறிஇருந்த அவன் உடம்பைத் தேய்த்து விடுவதில் அவள் லயித்திருந்தாள். குளிப்பு என்ற களியாட்டம் சுவாரஸ்யமாக முடிந்தது

வீட்டுக்குவெளியே வந்து அண்ணன் வருகிறானா என்று பார்த்தாள் பாஞ்சாலை. ஆள் அரவம் இல்லை.

''என்னை பார்த்துக் கிட்டிருக்கே உள்ளே வா'' என்று அவளை இழுத்துக் கொண்டான் வையாபுரி.

ஒடுகிற நடக்கிற பாதைகளில் எல்லாம் யார்யாரையோ சந்தித்து இனிமையை சுவைத்த அவனுக்கு இப்படி சுகமாகத் தங்கிப்பேசிக் கொண்டிருப்பதில் எல்லையில்லா மகிழ்ச்சி இருந்தது.

உல்லாசமாகப் பொழுது கழிந்தது.

நடுஇரவில் தள்ளாடியபடி கருப்பசாமி வந்தான்.

வையாபுரியைப் பார்த்ததும் அதிர்ந்து போனான்.

அவனுக்கு ஒத்தாசையாக இன்னமும் பாஞ்சாலை இருக்கிறாளே என்ற வருத்தம் அவனுக்கு.

குடிபோதையில் அவன் வையாபுரியைத் திட்டினான். இனிமேல் வந்தால் முன்பைப்போல இனியும்போலீசுக்குத்தகவல் கொடுத்து விடுவதாக மிரட்டினான்.

''இனிமேல் நீ பாஞ்சாலையைப் பார்க்க வரக்கூடாது'' என்று வையாபுரியைஎச்சரித்தான்

பாஞ்சாலைக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. வையாபுரியை அவளால் இழக்க முடியவில்லை. கொடியவனான அண்ணனை எதிர்க்கவும் அவளுக்குத் தைரியம் இல்லை.

''இனிமே இங்கே நீ வந்தா தீர்த்துக் கட்டிப்புடுவேன். போலீஸ்என்கையிலே. புடிச்சுக் குடுத்துப்புடுவேன்'' என்று போதையில் உளறியபடி வீட்டின் மற்றொரு பகுதியில் போய் படுத்தான் கருப்பசாமி

சிறிது காலமே ஓடப்போகும் தனது வாழ்வுக்கு உள்ளுக்குள்ளே ஒரு எதிரி இருப்பது பிடிக்கவில்லை

''பாஞ்சாலை நீ இரு. இவனை நான் அப்புறம் கவனிச்சுக்கிறேன்'' என்று கூறி ஒரு முடிவுக்கு வந்தவனாக வெளியேறினான் வையாபுரி.

(தொடரும்)

## புத்தகம் வாங்கும் பழக்கம்

''வங்காளத்தில் ஒருகுடும்பத்தில் 5 பேர் இருந்தால் ஒரே புத்தகம் மட்டும் வாங்குவதில்லை. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு புத்தகம் வீதம் ஐந்து புத்தகங்கள் வாங்குகிறார்கள் இங்குகாசு கொடுத்து தமிழ்புத்தகங்களையும் அது போல் வாங்கும் பழக்கம் வர வேண்டும் அப்போதுதான் எழுத்தாளர்களுக்கும் அதனை வெளியிடுகின்றவர்களுக்கும் உற்சாகம் வரும்

பொங்கலன்று தியாகராய நகரில் நடைபெற்ற 'விளம்பரப்புலி' நாடக புத்தக வெளியீட்டு விழாவில் வானொலி நிலைய இயக்குநர் கந்தசாமி துரைவன் பேசும் போது கூறியது

பொன்மொழி புதையல்

### அறம்

விலங்கைவிட உயர்ந்தவனாக மனிதன் விளங்குவதற்குக் காரணமானதும் மக்களினத்தை உண்மையாக உயர்த்த வல்லதும் அறம்.

-டாக்டர் மு. வ.

தர்மத்தைக் காக்கத் தைரியம் வேண்டும் தைரியத்தை இழந்தோமானால் மனைவி, மக்களையும் காக்க முடியாது. அச்சத்தை அகற்றி அனைத்திலும் விலையுயர்ந்த பொருளாகிய தருமத்தைக் காப்போமாக.

-மூதறிஞர் இராஜாஜி

## சிரிப்போ சிரிப்பு

சாப்பிடுபவர்: கோழி பிரியாணியில் கோழியே இல்லையேப்பா...

சர்வர்: மைசூர்பாக்கில் மைசூரா இருக்கிறது...?

சாப்பிடுபவர்: !!?

ஒருவர்: ''அவர் பேனாவையே நம்பி வாழ்கிறார்''

மற்றொருவர்: ''எழுத்தாளரா?''

''இல்லே, பேனா... ரிப்பேர் செய்வார்''

எம். அரங்கநாதன்

## தொடரும் நினைவு

சுவர்ணமூர்த்தி

அந்த நேரத்தில் தான் காற்று சற்று பலமாக வீசத் தொடங்கியது. ''என்னங்க மழை பெய்யும் போலிருக்கே போகலாமா'' என்றார் என் நண்பர். ''ஆ.. நீங்க ஒண்ணு மழையாவது பெய்யறதாவது'' என்று கூறி முடிப்பதற்குள் மழை 'சோவென' கொட்ட ஆரம்பித்தது. எங்கள் பேச்சை மூட்டை கட்டிக் கொண்டு அரச மரத்தைப் பார்த்து ஓட்டம்பிடித்தோம் சில விநாடிகளுக்கெல்லாம் இடியும் மின்னலும் போட்டியிட்டது. காற்றோடு மழை கலந்து சுழன்றடித்தது. ''என்னங்க ராத்திரி வேளையிலே மரத்தடியிலே நிற்கக் கூடாதென்பார்களே? அதுவும் அரசமரத்தடியிலே நிற்கிறோமே..!'' என்றார் நண்பர். ''நீங்க ஒண்ணு, வீண் பீதிகளால் பயப்படறீங்களா? அதெல்லாம்..'' என்று நான் நீட்டிக் கொண்டே போகும் போது ஒரு நாய் பயங்கரமாக ஓலமிட்டு அழுதது. அவ்வளவு தான் என் நண்பர் 'ஓ'வெனக் கதறி ''அய்யய்யோ! நான் இல்லே! நான் இல்லே!'' என்று கூச்சலிட்டார். இதைக் கேட்ட நானும் கூட சேர்ந்து ஒரு கூச்சல் போட்டேன். பிறகு ''தாமு... தாமு: ஏன் அப்படி கூச்சல் போட்டீங்க'' என்றேன். ''அய்யய்யோ வந்துட்டாளே!'' என்று நடுங்கினர்.

அவர் முகம் பேயறைந்தது போல் காட்சியளித்தது.

பலநா கங்களை எழுதி புகழ் பெற்றவரும 'அதிகாரம்' படத்தின் கதாசிரியரும டைரக்டருமான சுவர்ணமூர்த்தி இந்நினைவை எழுதியுள்ளார்

மாகி நான்காண்டு கடந்தவர் மறைவிலே செல்வம் இல்லாமல் ஏங்கித் தவித்துக் கொண்டிருந்தார். இவருடைய வீட்டிற்குள் காலடி வைத்து ஓராண்டிற்குள் செல்வியை ஈன்றெடுத்தாள். அந்த செல்வியைத்தான் ஒருநாள் என் நண்பர் விழா ஒன்றிற்கு எடுத்துச்சென்றிருந்தார்.

மகிழ்ச்சிக்கடலிலே ஒரேயடியாக மூழ்கியிருந்த அவர்கள் அதிலிருந்து சற்று விடுபட ஓராண்டு கடந்தது. தன் செல்வத்தை மடியிலே தவழவிட்டு, அதன் சிங்காரப் புன்னகையைக்கண்டு அந்த இன்பப் பெருக்கிலேயே ஓராண்டு இரண்டாண்டு என்று கழித்து விட்டது முத்தான மொழிகளை உதிர்க்கும் மூன்றாவது ஆண்டில்தான் தங்கள் செல்வத்தை பிறர் பார்த்து மகிழ அனுமதித்தார்கள். அந்த பாக்கியத்தை முதன் முதல் பெற்றவர் எனது நண்பர் தான்!

''என்னங்க, மணி 10 ஆகுது இன்னும் அவரு வரலீங்களே?'' என்றாள் மரகதம் ''வருவாங்க, மழைக்கொட்டுதே... வண்டி கிடைக்க வேண்டாமா?'' என்று ஆறுதல் கூறினார் மரகதத்தின் கணவர் ஏகாம்பரம் ஐந்து நிமிடத்திற்கெல்லாம் கதவு தட்டும் ஓசை கேட்டு மரகதம் கதவைத் திறக்கச் சென்றாள். ''பார்த்தீங்களா? குழந்தை எப்படி நனஞ்சு வந்திருக்கு! உடம்புக்கு என்ன வருதோ!'' என்றாள்

இருந்தாலும் நான் சதிரியத்தை துணைக்கு அழைத்துக் கொண்டு ''என்ன என்ன தாமு. என்ன கூடாதது? ஏன் இப்படி?'' என்றேன். ''நான என்னுங்க சொல்வேன்? எனக்கு பயமாயிருக்கே!''

''ஏங்க பூட்டி பயப்படுறீங்க? ஒன்றுமில்லே நாய் ஊளையிட்டது. அதனால் இப்படி பயப்படுவது? வாங்க போகலாம்'' என்று கூறி மழையில் நடத்திச் சென்றேன்.

அன்று என்னிடம் அவர் சொன்ன கதையைத்தான் இன்று இங்கு எழுதியிருக்கிறேன்; அவருடைய அனுமதியைப் பெற்றுப் படியுங்கள்.

உலகிலேயே அதிகநாள் மழை பெய்யக் கூடிய அஸ்ஸாம் மாகாணத்தில் உள்ள சிரபுஞ்சியில்தான் என் நண்பர் வேலை பார்த்து வந்தார் அங்கேதான் அவருக்கு ஒரு சொந்த வீடும் இருந்தது. அவருடைய மனைவியைப் பார்க்கில் கொள்ளை வீட்டில் ஒரு பகுதியை அவருக்கு வாடகைக்கு விட்டிருந்தார், நண்பர் பண

மரகதம். ''சரிதான், ஆகட்டும். அவர் மட்டும் என்ன செய்வார்? மழையால் கொட்டிக்கிட்டே இருக்கிறதே'' என்றார்.

''வண்டியிலேதான் அழைச்சுகிட்டு வந்தேன். அடடா, ஈரமாயிருக்குதே''

''பரவாயில்லே நீங்க போங்க'' என்று கூறி தாமுவை அனுப்பினர்.

மரகதம் தன் மகள் பிறந்த இந்த மூன்றாண்டாக எங்கேயும் வெளியே எடுத்துச் செல்லவில்லை வெளியே சென்றால் தன் மகள் மீது யாராவது கண் பட்டுவிடுமோ, என்று எண்ணத்தினால்தான் அவள் எங்கும் போகாமல் வீட்டிலேயே கொஞ்சிக் குலவி மகிழ்ந்து வந்தாள் அந்த அன்புள்ளத்திற்கு தன் மகள் மழையில் நனைந்து வந்திருப்பது வேதனையைத் தந்தது.

இரவோடு சேர்ந்து மரகதம் மகளை தூக்கிக் கொண்டிருந்தாள் வெளியே மழை 'சள' வென கொட்

(4-ம் பக்கம் பார்க்க)

சோவியத் பாலே நடனக் குழுவினரின் நடன நிகழ்ச்சி சென்னையில் தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தினரால் நடத்தப்பட்டது.

முதல்வர் புரட்சித்தலைவர் முழக்கம்

# ஒரு தாய் மக்கள் என்ற உணர்வில் ஒருமைப்பாட்டைக் காப்போம்

**சென்னை, ஜன. 19- "அனைவரும் ஒரு தாய் மக்கள் என்ற உணர்வுடன் ஒருமைப்பாட்டைப் பேணிக் காப்போம்" என்று சாரணர் விழாவில் பேசுகையில் முதல்வர் புரட்சித் தலைவர் குறிப்பிட்டார்.**

முதல்வர் புரட்சித்தலைவரை இங்கிலாந்து தூதர் ஜான்தாம்சன் தலைமைச் செயலகத்தில் சந்தித்துப் பேசினர்.

தாம்பரத்தைஅடுத்தகாட்டாங் குளத்தூரில் சிவானந்த சரசுவதி சேவாசிரமத்தில் பெண்களுக்கான விடுமுறை கால பயிற்சி முகாமை பிரதமர் தேசாய் தொடங்கிவைத்தார், அவர் பேசும்போது சமூகத்தில் பெண்களுக்கும் சம அந்தஸ்து வழங்கப்பட வேண்டும் தாய்மார்களுக்கு கல்வியறிவு இருந்துவிட்டால் அவர்களுக்கு பிறக்கும் குழந்தைகளும் கல்வி கற்பம்தாடு புதிய சமுதாயம் உருவாகும் இந்தியாவில் புரட்சிகர மாற்றம் ஏற்பட இதுபோன்றவிடுமுறைக்கால பயிற்சி முகாம்கள் பெரிதும் உதவும் என்று குறிப்பிட்டார்.

விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:-

இப்படிப்பட்ட சேவை அமைப்புக்கள் நடத்துவது மிகப்பெரிய பொறுப்பான செயலாகும். கல்வி கற்கும் போது தொழிற்கல்வியையும் யும் கற்க வேண்டியது அவசியம் என்பதில் யாருக்கும் மாறுபட்ட கருத்து இராது இதனை உணர்ந்துதான் தமிழக அரசு 10+2+3 பாடத்திட்டத்தை செயல்படுத்தி வருகிறது 10 ஆண்டு பள்ளிப் படிப்புக்குப் பின் 2 ஆண்டுகள் பள்ளிக் கூடத்திலேயே தொழில்கல்வி கற்கவேண்டும். மேலும் தொடர விருப்பமுள்ளவர்கள் கல்லூரிக்குச் செல்லலாம் மற்றவர்கள் தொழில் தொடங்கலாம்.

## தொழிலில் தாழ்வில்லை

இளந்தளிர்களை எதிர்காலத்துக்கு தகுதியானவர்களாக ஆக்கும்போது கல்வியுடன் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும்சேர்த்து கற்றுத்தரவேண்டும்என்று ஆசிரியர்களையும் பெரியவர்களையும் நான்கேட்டுக் கொள்கிறேன்.

ஜாதியைச் சொல்லி மதத்தைச் சொல்லி எதிர்கால சந்ததியினரிடையே பிளவுமனப்பான்மையையோ அல்லது தாழ்வு மனப்பான்மையையோ உருவாகிடக் கூடாது தொழிலுக்கு மதிப்பதவிர சாதிமதத்துக்கு அல்ல தொழிலில் உயர்வுதாழ்வு இல்லை உழைப்போம் உயர்வோம்''.

இவ்வாறு முதல்வர்புரட்சித்தலைவர் பேசினார்.

தமர் மொரார்ஜி தேசாய் நேற்று மாலை தொடங்கி வைத்தார். சாரண, சாரணியர் அணிவகுப்பை தேசாய் ஏற்றுக் கொண்டார்

விழாவுக்கு வந்திருந்தவர்களை முதல்வர் புரட்சித் தலைவர் வரவேற்றுப் பேசினார் வரவேற்புரையில் புரட்சித்தலைவர் கூறியதாவது:-

பல்வேறு நாடுகளிலிருந்தும் பல்வேறு மாநிலங்களில் இருந்தும் இங்கே வந்திருந்தாலும் பல்வேறு மொழிகளைப் பேசுபவர்களாக இருந்தும், பல்வேறு கலாச்சாரத்துக்குச்சொந்தக்காரர்களாக இருந்தும் நாமனைவரும் ஒரு தாய் மக்கள் தான் என்ற உயர்ந்த லட்சியத்தில் நீங்களனைவரும் இங்கு கூடியிருக்கிறீர்கள்.

ஒருமைப்பாட்டுக்கு உதவிடும் நல்ல குடிமகன் என்ற தகுதியை சாரணர் இயக்கம் ஏற்படுத்துகிறது:

எல்லோரும் ஓர்குலம் எல்லோரும இந்நாட்டு மன்னர் என்ற லட்சியத்தில் செயல்படும்போது முதலில் நாடு என்ற உணர்வுடன் ஜனநாயகத் தத்துவத்தில் நம்பிக்கை உள்ளவர்களாக ஜாதி மதத்துக்கு அப்பாற்பட்டுநாட்டிற்காக உழைக்க வேண்டும்.

தடியெடுத்தவன் தண்டல்காரன் வலுவுள்ளவன்

4-ம் பக்கம் பார்க்க

## திருச்சி தோழர்களுக்கு முசிறிபுத்தன் வேண்டுகோள்

திருச்சி, ஜன. 19 கோவைமாநாட்டுக்குதிருச்சியில் இருந்து 50 தனி பஸ்களில் கழகத் தோழர்கள் செல்கிறார்கள் மாநாட்டுக்குச் செல்லும் தோழர்கள் 22 ந் தேதிக்குள் பின் கண்ட தோழர்களுடன் தொடர்பு கொள்ளுமாறுமன்றத் தலைவர் முசிறிபுத்தன் கேட்டுக் கொண்டுள்ளார்.

ஜி.எஸ். நாதன் ரேஸ்கோ ஹோம் திருச்சி.

கே எம் ஷேக்தாவூத், பி ஜே குமார், முகமது, ஜூபிடர் டாக்கீஸ் ஜாலக்கரை, திருச்சி.

பிகே சண்முகம், ஜாப்ஸா தங்கவேலு செல்வம், லாட்ஜ் திருச்சி.

அபீப், சுப்ரமணியம், பிரியாகட்பீஸ்ஸ்டோர் திருச்சி தி.மா. வேலாயுதம், நகர செயலர் மணச்சநல்லூர்.

ஆ. கனகராஜ, ஒன்றிய இணைச்செயலர் முசிறி.

# சிறு விவசாயிகளுக்கு உதவிசெய்வதேகழக அரசின் நோக்கம்

அமைச்சர் எஸ். டி. எஸ். பேச்சு

**பட்டுக்கோட்டை, ஜன. 19—தமிழ்நாட்டில் உள்ள 2 கோடி ஏக்கர் நிலத்தில் 33 சதவிகித நிலம்தான் 72 சதவிகித சிறிய விவசாயிகளிடம இருக்கிறது. இவர்களுக்குத்தான் புரட்சித்தலைவர் தலைமையில் உள்ள தமிழக அரசு உதவி செய்கிறது என்று அமைச்சர் எஸ். டி. எஸ் கூறினர்.**

தஞ்சை மாவட்டம் பட்டுக்கோட்டையை அடுத்துள்ள பின்னவாசல் கிராமத்தில் கிராமக் கூட்டுறவு விவசாயிகள் சங்கத்தின் சார்பில் 30 சிறு விவசாயிகளுக்கு ''உழவு மாடுகள்'' வழங்குப் விழா நடைபெற்றது.

இந்த விழாவுக்கு பேராவூரணி தொகுதி சட்டமன்ற உறுப்பினர் கோவேந்தன் தலைமை வகித்தார விழாவில் குழ. செல்லையா, தாமோதரன், டாக்டர் தங்கவேலு ஆகியோர் பேசினர்கள்.

இந்த விழாவில் 40 சிறு விவசாயிகளுக்கு வழங்குவதாக இருந்தது. 30 ஜோடி மாடுகள் தான கிடைத்தது.

30 சிறு விவசாயிகளுக்கு உழவு மாடுகளை வழங்கி தமிழக வருவாய்த்துறை அமைச்சர் எஸ்.டி.எஸ். பேசுகையில் கூறியதாவது:

இங்கு விவசாயிகளுக்கு உழவு மாடுகள் வழங்கப்படுகிறது. இவற்றின் மதிப்பு ரூ. 80ஆயிரம ஆகும். இதில் 25 சதவிகிதம் (20 ஆயிரம் ரூபாய்) மானியமாக கொடுக்கப்படுகிறது.

இது மட்டுமில்லாமல் சிறுவிவசாயிகள் மேம்பாடு அடைய வேண்டும் என்பதற்காக ஆடு வளர்க்கவும், பட்டுப் பூச்சி வளர்க்கவும் அரசு கடனுதவிகளை அளிக்கிறது.

இந்த நாட்டில் விவசாயிகள்தான் மிகவும் பொறுப்புள்ளவர்கள் நம் நாட்டில் உள்ள 2 கோடி ஏக்கர் நிலத்தில் 33 சதவிகித நிலம்தான் சிறிய விவசாயிகளிடம்இருக்கிறது. இதில் 72 சதவிகித சிறிய விவசாயிகள் பயிர் செய்கிறார்கள்.

67 சதவிகித நிலம் 28 சதவிகித பெரிய விவசாயிகளிடம் இருக்கிறது. விவசாயத்திற்கு கால்நடைகள்மிகவும்அவசியமானது. அந்த கால்நடைகளுக்கு இன்ஷ்யூர் செய்யப்படுகிறது. உங்கள் கால்நடைகளுக்கு நோய் வந்தால் உடனே தெரிவியுங்கள் நாங்கள் வந்து வைத்தியம செய்கிறோம் என்று இங்கே கால்நடைத்துறை அதிகாரி தெரிவித்திருக்கிறார்.

கிராமங்களில் உள்ள மக்களின் நன்மைக்காக ஒவ்வொரு ரெவின்யூ கிராமத்திலும் தமிழக அரசு நியாயவிலைக் கடைகளைத் திறக்கிறது. அருமைத் தாய்மார்கள் அவைகளில் பொருள்களை வாங்கி பயனடையும் டி கேட்டுக் கொள்கிறேன். இந்த அரசு கிராம மக்களுக்கும், சிறு விவசாயிகளுக்கும் முக்கியத்துவம் அளித்து உதவி செய்கிறது.

இவ்வாறு அமைச்சர் எஸ், டி. எஸ். பேசினார்.

இதே விழாவில் நியாய விலைக்கடை திறப்பும் நடந்தது. பொன்னுசாமிக்கு மஞ்சளையும். சுருட்டையாவுக்கு உப்பையும் அமைச்சர எஸ். டி. எஸ். விற்று விற்பனையைத் துவக்கி வைத்தார்.

## சாரணர் முகாம்

காட்டாங்குளத்தூரை அடுத்த மறைமலை நகரில் சர்வதேச சாரணப் பயிற்சி முகாம் நடக்கிறது. அமெரிக்கா, ஜப்பான், மலேயா, இலங்கை மற்றும் இந்தியாவின் அனைத்து மாநிலங்களையும் சேர்ந்த 20 ஆயிரத்துக்கு மேற்பட்ட சாரணர்களும் சாரணியர்களும் இந்தப் பயிற்சி முகாமில் பங்கேற்றனர். இந்த பயிற்சிமுகாமுக்கு ''ஜம்போரி'' என்றுபெயர்.

''ஜம்போரி''யைப் பிர

கீழ்பாக்கும் அரசு சீர்திருத்தப்பள்ளி சிறுவர்களுக்கு பொங்கலன்று அமைச்சர் பி. டி எஸ். வழங்கினார்

# தமிழ்நாடு அரசு

## பொதுப்பணித்துறை

## பெரியாறு மேம்பாடு வட்டம். எண். 3, மதுரை

# ஒப்பந்தப்புள்ளி அறிவிப்பு

எண் 424|க. 1-கோ. 14|79. நாள் 5-1-79

## ஒப்பந்தப்படிவம் - எல். எஸ்.

தமிழ்நாடு ஆளுநருக்காகவும், அவர் சார்பிலும், கீழ்க்கண்ட வேலைகளுக்கு மூடி முத்திரையிடப்பட்ட ஒப்பந்தப்புள்ளிகள், அடியிற் கையொப்பமிடப்பட்டவரால் 23-2-79 அன்று மாலை (அலுவலகக் கடிகாரப்படி) 3-00 மணி வரை வரவேற்கப்படுகிறது. ஒப்பந்தப்புள்ளிகள் அன்றே மாலை 3-30 மணி அளவில் திறக்கப்படும்.

| வரிசை எண் | வேலையின் பெயர் | ஒப்பந்தக் காரரின் வகுப்பு | ஒப்பந்தக் காலம் | முன் வைப்புத் தொகை | ஒப்பந்த நமூனாவின் விலை, விற்பனை வரி, சர் சார்ஜ் உட்பட (திருப்பித் தரப்படமாட்டாது) | முன்வைப்புத் தொகை செலுத்த வேண்டிய செயற்பொறியாளர் அலுவலகம், | ஒப்பந்த நமூனாவின் விலை செலுத்தப்பட வேண்டிய செயற்பொறியாளர் அலுவலகம் |
|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) |
| 1. | தற்போதுள்ள பெரியாறு பிரதான கால்வாயின் 2-வது கிளை வாய்க்காலின் கீழ்கண்ட பகுதியில்அடித்தளத்தையும் பக்கங்களையும்,சிமிண்ட் கான்கிரீட்டில் தளமிடுதல். பகுதி எண் 1 முதல் 6 வரை 0.0 மீ முதல் 1209 மீ வரை | வகுப்பு 3 ம் அதற்கு மேலும் | 5 மாதங்கள் | ரூ. 4800- (ரூபாய் நான்கு ஆயிரத்து எட்டுநூறு மட்டும்) | ரூ. 25- மற்றும்ரூ. 1.05 (விற்பனை வரி சர் சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர் (பொ. ப. து.) பெரியாறு மேம்பாட்டுக்கோட்டம் எண் 10, மதுரை-2. | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம்பாட்டு கோட்டம் எண். 10, மதுரை-2. |
| 2. | தற்போதுள்ள பெரியாறு பிரதான கால்வாயின் 2-வது கிளைவாய்க்காலின் கீழ்கண்ட பகுதியின் அடித்தளத்தையும் பக்கங்களையும், சிமிண்ட் கான்கிரீட்டில் தளமிடுதல். பகுதி எண். 7 முதல் 12 வரை 1809 மீ. முதல் 3811 மீ. வரை. | வகுப்பு 2-ம் அதற்கு மேலும். | 5 மாதங்கள். | ரூ. 5300- (ரூபாய் அய்ந்து ஆயிரத்து முன்னூறு மட்டும்) | ரூ. 25-மற்றும் ரூ. 1. 05 (விற்பனை வரி (சர்சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர், பொ. ப. து. பெரியாறு மேம்பாட்டுக் கோட்டம் எண். 10, மதுரை | செயற்பொறி பொ. ப. து. பெரியாறு மேம்பாட்டுக் கோட்டம் எண். 10, மதுரை. |
| 3. | தற்போதுள்ள பெரியாறு பிரதானகால்வாயின்12-வது கிளை வாய்க்காலின் கீழ்கண்ட பகுதியில் அடிதளத்தையும், பக்கங்களையும் சிமிண்ட்கான்கிரீட்டில் தளமிடுதல். பகுதி எண். 11. 9513 மீ. முதல் 9783மீ. வரை. | வகுப்பு 3ம் அதற்கு மேலும் | 5மாதங்கள் | ரூ. 3300- (ரூபாய் மூன்று ஆயிரத்து முன்னூறு மட்டும்) | ரூ. 25- மற்றும் 1.05 (விற்பனை வரி சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர் (பொ. ப.து)பெரியாறு மேம் பாட்டுக் கோட்டம் எண். 3 மேலூர். | செயற்பொறியாளர் பொ. ப.து.பெரியாறு மேம் பாட்டுக் கோட்டம், எண், 11 மதுரை |
| 4. | தற்போதுள்ள பெரியாறு பிரதான கால்வாய்ன் கிழ்கண்ட 12-வது கிளை வாய்க்காலின் கிழ்க்கண்ட பகுதியின் அடித்தளத்தையும், பக்கங்களையும், சிமிண்ட் கான்கிரீட்டில் தளமிடுதல். பகுதி எண் 11 'ஏ' 9783 மீ. முதல் 10126 மீ வரை. | வகுப்பு 3-ம் அதற்கு மேலும் | 5 மாதங்கள் | ரூ. 4300- (ரூபாய் நான்கு ஆயிரத்து முன்னூறு மட்டும்) | ரூ. 25-மற்றும் 1.05 (விற்பனை வரி சர் சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம்பாட்டுக்கோட்டம் எண்-8 மேலூர். | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம்பாட்டுக்கோட்டம் எண். 11 மதுரை. |
| 5. | தற்போதுள்ள பெரியாறு பிரதானகால்வாயின் 9வதுகிளை வாய்க்காலின் கீழ்க்கண்ட பகுதியின் அடித்தளத்தையும் பக்கங்களையும் சிமிண்ட் கான்கிரீட்டில் தளமிடுதல். பகுதி எண்-5 980 மீ. முதல் 1740மீ. வரை | வகுப்பு 3ம் அதற்கு மேலும் | 5 மாதங்கள் | ரூ. 4200- (ரூபாய் நான்கு ஆயிரத்து இரண்டு நூறு மட்டும்) | ரூ. 25 மற்றும் ரூ. 1-05 (விற்பனை வரி சர் சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம் பாட்டு கோட்டம் எண்-8, மேலூர் | செயற்பொறியாளர் பொ. ப. து. பெரியாறு மேம் பாட்டுக் கோட்டம் எண் - 19, மதுரை. |
| 6. | தற்போதுள்ள பெரியாறு பிரதான கால்வாயின் 11 வது கிளை வாய்க்காலின் கீழ்க்கண்ட பகுதியின் அடித்தளத்தையும், பக்கங்களையும் சிமிண்ட் கான்கிரீட்டில் தளமிடுதல் பகுதி எண். 8. 4977 மீ. முதல் 5617 மீ. வரை | வகுப்பு 3 ம் அதற்கு மேலும் | 5 மாதங்கள் | ரூ. 3100- (ரூபாய் மூன்று ஆயிரத்து நூறு மட்டும) | ரூ. 25- மற்றும் 1.05 (விற்பனை வரி, சர்சார்ஜ் உட்பட) | செயற்பொறியாளர், பொ. ப. து. பெரியாறு மேம்பாட்டுக்கோட்டம் எண், 8 மேலூர். | செயற்பொறியாளர், பொ. ப. து. பெரியாறு மேம்பாட்டுக்கோட்டம் எண். 11, மதுரை. |

இந்த ஒப்பந்த விவரம் சம்பந்தப்பட்ட மற்ற முழுவிவரங்கள் மேற்கண்ட பகுதி எண், 6-ல் குறிப்பிட்டுள்ளபடி தொகையைக் கட்டி வாங்க வேண்டிய நமூனாக்களின் (டெண்டர் ஷெட்டியூலில்) உள்ளன.

மேற்கண்ட ஒப்பந்தப்புள்ளிப்படி அட்டவணைக்குரிய வைப்புத் தொகை அரசாங்க கருவூலங்களிலோ அல்லது ''ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா''விலோ ஒவ்வொரு வேலைக்கும், அதன் நேர் பகுதி எண் 8-ல் குறிப்பிட்டுள்ள சம்பந்தப்பட்ட செயற்பொறியாளர் கணக்கில் ''882 I. W. Other remittance'', மேலும் விற்பனை வரி, ''040- Sales Tax - B receipt Under State Sales tax other receipt'' - என்ற கணக்கு தலைப்புகளிலும் தனித்தனியாகவோ, அல்லது பகுதி எண் 8-ல் குறிப்பிட்டுள்ள செயற் பொறியாளர் அலுவலகங்களில் பணமாகவோ செலுத்தலாம்.

12-2-79 முதல் 20-2-79 முடிய ஒப்பந்தப்புள்ளி நமூனாக்கள் வேலை நாட்களின் அலுவலக நேரங்களில் பெற்றுக்கொள்ளலாம்.

ஜே. என். தாசன்,



கண்காணிப்புப்பொறியாளர், பொ. ப. து. பெரியாறு மேம்பாடு வட்டம் எண், 3

மதுரை-625002.

# ஒருமைப் பாட்டை காப்போம்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

எதையும் செய்யலாம் என்ற நிலை ஏற்படாமல் தடுக்க உதவும் இந்த இயக்கம் வலுப் பெற வேண்டும்.

## ஒருதாய் மக்கள்

உங்களுக்கு மொழி தெரியாமல் இருக்கலாம் எனினும் ஒன்றுபடுகிறீர்கள் பண்பாட்டில் வேறுபட்டிருக்கலாம், எனினும் ஒன்றுபடுகிறீர்கள் ஒருதாய் மக்களாக பழகுகிறீர்கள் இத்தகைய சாரண சாரணியர்களை தமிழக அரசின் சார்பாகவும் தமிழ்மக்கள் சார்பிலும் வரவேற்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

ஜம்போரி மலரை மத்திய மின்சார மந்திரி பா. ராமச்சந்திரன் வெளியிட்டார். தமிழக கல்வி அமைச்சர் அரங்கநாயகம் நன்றி கூறினார். ஆளுநர் பட்வாரியும் விழாவில் பங்கேற்றார்.





# தொடரும் நினைவு...

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

டிக்கொண்டிருந்தது. கடிகாரம் சரியாக 2 அடித்து ஓய்ந்தது அந்த நேரத்தில் எங்கிருந்தோ ஒருநாய் ஓங்காரமாக ஓலமிட்டு அழும் குரல் கேட்டது.

"அம்மா" என்று கூச்சல் போட்டு கணவனை எழுப்பினாள்.

"என்ன மரகதம்? என்ன?"

'குழந்தைபயந்து கூச்சல் போட்டது. அய்யோஉடம்பு கொதிக்கிறதே--! என்னங்க இப்ப என்ன செய்யறது?"

குழந்தையைப் பார்த்துவிட்டு இப்போதைக்கு அந்த தைலத்தை கொஞ்சம் தடவு பொழுது விடியட்டும். டாக்டர் வீட்டுக்குப் போவோம்' என்றார்.

சரியாக ஏழுநாட்கள் கழிந்தது காய்ச்சல் குறையவில்லை குழந்தையின் பாசத்தால் மரகதம் வைத்தியம் பிடித்தவள்போல் ஆனாள் இடையிடையே அவளுடைய ஆத்திரத்திற்கு என் நண்பர் ஆளானார் ஆமாம் அன்று அவர் அழைத்துச் சென்றதால்தான் என்மகள் இன்று இந்நிலையில் இருக்கிறாள் என்று அவர் மீது குறைப்பட்டாள். உள்ளத்திலே தாமுவை வைதுக்கொண்டே குழந்தையைத் தொட்டுப் பார்த்தாள்.

குழந்தைக்கு காய்ச்சல் அதிகரித்திருந்தது உடனே டாக்டருக்கு ஆள் அனுப்பி வரவழைத்தார். வந்தவர் குழந்தையின் நிலையை பார்த்துவிட்டு சொல்வதற்கு ஒன்றுமில்லை! என்று கூறி போய்விட்டார்.

கடிகாரம் சரியாக பனிரெண்டு முறை ஓசைஎழுப்பி ஓய்ந்தது நடு நிசியாகியும் மரகதம் தன் இமைகளை மூடாவண்ணம் தன் சுய உணர்வோடு அமர்ந்திருந்தாள் அரைமணி அடித்தது தெருமுனையிலே அன்றொரு நாள் ஓலமிட்ட நாய் இன்று தன்னுடைய முகாரியை மீண்டும் பாடியது. இந்த இடைவெளிக்குள் கண் மூடிய மரகதம் நாயின் ஓலக்குரல்கேட்டு மீண்டும் உணர்வு ஏற்பட்டுக் கண் விழித்தாள். உடனே தன் செல்வியின் நினைவு வந்தது. செல்வியைத் தொட்டுப் பார்த்தாள். உலுக்கினாள்! "செல்வி! செல்வி..! அய்யோ, செல்வி! பேயறைந்தவள் போல் கூச்சலிட்டாள், தொடர்ந்து "அய்யோ..!" அந்த கூச்சல் சற்றுமுன் ஓலமிட்ட நாயின் குரலை பின்னணியாக கொண்டிருந்தது இக்கோரக்கூச்சலைக் கேட்டு என் நண்பரும், ஏகாம்பரமும் ஓடிவந்தவர்கள் என்ன, மரகதம்..? என்ன ஆகியது? அய்யோ...! என் செல்வி...! கோரமாக அழுதாள். "செல்வி! என்ன மரகதம்? என்ன? ' அடுத்த விநாடி அவனுக்கும் புரிந்துவிட்டது. வீடே அழுகையில் ஆழ்ந்தது.

மறைந்தவளை மண்ணிலே யிட்டு மறுநாளும் பிறந்தது! இரவும் வந்தது! தன்னந்தனியே தன் செல்வியின் திருஉருவத்தின் முன்நின்று புலம்பியவாறு இருந்தாள்.

"அம்மா செல்வி, அந்தப்பாதகன்தான் உன்னை கொன்னுட்டானம்மா! உனக்கு எமனாக வந்துவாய்த்தானே அந்த தாமு!"

இரவு பகல் எல்லாம் அவளுடைய நினைவுதான் "செல்வி நீ எப்போது மறுபடியும் திரும்பிவரப்போகிறாயோ" நெஞ்சு விம்மியது.

நித்தம் நிதம் "எனக்குச் சாவு வராதா?" என்று அழுதுவடியும் அந்த நோய் பிடித்த நாய் அன்றிரவும் தனது பல்லவியைப் பாட ஆரம்பித்தது! மரகதத்தின் உடல் சிலிர்த்தது! அடுத்த விநாடி அவளும் கோரமாக கூச்சலிட்டாள். செல்வி அவளை அழைப்பது போன்ற உணர்வு.

"அம்மா, அப்பா கிட்டே சொல்லிவிட்டு அப்படியே தாமு மாமா கிட்டே என்பாட்டாவை சொல்லிட்டு சீக்கிரம் என்கிட்டே ஓடியாம்மா!" மழலை பேசியது.

"தாமு, மாமா! அந்தப் பாவிதாண்டா கண்ணு உன்னை அங்கே அனுப்பிச்சது அவனை முதல்லே உன்கிட்டே அனுப்புகிறேன்" என்று உறக்கக் கூறும்போது அவள் செவியில் மீண்டும் அந்த நாய் ஓலமிடுவது போல் பிரமை ஏற்பட்டு அவள் ஓலமிட்டாள் அறையிலிருந்த கத்தியை எடுத்துக் கொண்டு மாடிக்கு ஓடினாள் ஏகாம்பரமும் விழித்துக் கொண்டு பின் தொடர்ந்து ஓடினார் "மரகதம்!" குரல் கொடுத்தார் இங்கே தான் இருக்கிறாயா? பாவி ஒழிந்து போ" என்று கூறியவாறு தன் ஆத்திரச் செயலை நிறைவேற்றினாள்.

படியேற முயற்சித்த ஏகாம்பரம் புரண்டு விழுந்தான்; ஆமாம் அந்த பிதுதுக்குளியின் ஆத்திரச் செயலுக்கு அடிமையானவன் அவளுடைய அன்புத் தெய்வம். மாடியிலிருந்து தாமு ஓடிவந்தான் ஏகாம்பரம் என்ன இதெல்லாம்? தங்கை ஏன் அப்படி ஓடுது? தாமு, அவளை நீ போய்ப்பிடிக்க வேண்டாம் குழந்தையின் மேலுள்ள பாசத்தால் உன்னையே தீர்த்துக்கட்ட வழித்தடினாள் அவளுடைய ஆத்திரத்திற்கு நல்ல வேளையாக நான் ஆளானேன் அவள் சித்தம கலங்கிவிட்டது. குழந்தையை ஒரு பக்கம் இழந்து மறுபக்கம்மனைவியை பைத்தியமாகப் பார்க்க என் மனம் இடம் கொடுக்கவில்லை கலங்கி நின்றிருந்த எனக்கு வழி வகுத்து விட்டாள். ஆனால் அவளுடைய முடிவு தான்..!"

"அய்யோ! இதென்ன கொடுமை! நீங்ககவலைப்படாதீங்க. தங்கையை நான் எப்படியும் குணப்படுத்துகிறேன்"

"தாமு, எனக்கு ஒரு உதவி செய்வாயா?" உயிரோடு போராடும் நேரத்தில் அவன் தாமுவிடம்எதையோ எதிர்பார்த்தான்

"என்ன வேண்டும் ஏகாம்பரம்? சொல்லு! நிச்சயம் செய்து வைக்கிறேன்.

"நீ எந்த விதத்திலும் என் மனைவியை குணப்படுத்த முயலாதே!"

"ஏகாம்பரம்!"

"ஆமாம்! தாமு. பைத்தியங்களுக்கு இன்ப துன்பம் தெரியாது! அதைத் தெளிவுபடுத்தினால் அதைவிட துன்பம் அவளை வாட்டுவதைக்கக் காத்துக்கிடக்கிறது."

"என்ன ஏகாம்பரம்? என்ன சொல்லுகிறாய்?"

தெளிந்தவள் தன்னுடைய முகம் மஞ்சளிழந்து திலகமிழந்து பூவிழந்திருப்பதைக் கண்டால் அவள் மனம் என்ன பாடுபடும்? மழலையை இழந்து துடிக்கும் தாய் உள்ளத்திற்கு மணமாலையிட்டவனும மறைந்தான் என்றால் என்ன பாடுபடும் தாமு! எனவே தாமு அவளை குணப்படுத்தாதே தா.." தலைசாய்ந்துவிட்டது.

அன்று முதல் எங்கு நாய் அலறினாலும் மரகதம் நினைவு தான் வருகிறது எனலாம் மரகதம் வைத்தியம் தெளிந்து பழிவாங்க வந்துவிடுவாளோ என்ற ஏக்கம் அவனுக்கு இன்றும் உண்டு.

## எஸ். டி. எஸ் நிகழ்ச்சிகள்

ஜன 20, 21 திருநெல்வேலியில் தந்தை பெரியார் நூற்றுண்டு விழாவில் கலந்து கொள்ளுதல் 22ந்தேதி புளியங்குளம் இறவை நீர்ப்பாசனத்தை பார்வையிடுதல் பொதுமக்கள் வரவேற்பு விளாத்திகுளம் ஒன்றியத்திலுள்ள விவசாயக்கிடங்கு திறப்பு விழா-பட்டா வழங்குதல் நூத்தலங்கரை புதிய பள்ளிக்கு அடிக்கல் நாட்டு விழா.

## கே. ஏ. கே.

ஜன. 20,21 நெல்லை பெரியார் விழா நிகழ்ச்சிகள். 22, குற்றாலம் பெண்கள் கல்லூரி கருத்தரங்கு, 24-25 கோவை மாநாடு செயற்குழு பொதுக்குழு.

# நன்றி அறிவிப்பு

தமிழர் திருநாளாம் பொங்கல் நாளன்று நலம் பொங்கிட வாழ்த்துக்கள் அனுப்பிய என் இதய தெய்வம் புரட்சித்தலைவர் அவர்களுக்கும், அமைச்சர் பெருமக்களுக்கும், நாடாளுமன்ற- சட்டமன்ற உறுப்பினர்களுக்கும், அரசு அதிகாரிகளுக்கும், அன்புள்ளம் கொண்ட கழக அடலேறுகளுக்கும் என் நன்றியினை காணிக்கையாக்குகிறேன்.

**பாக்கூர் சு. சுப்பிரமணியம்,**
சட்டப்பேரவை உறுப்பினர்,
உத்திரமேரூர் தொகுதி.

# நன்றி அறிவிப்பு

கழக நண்பர்களும், கதர் கிராமத் தொழில் வாரியப் பணியாளர்களும், சோழன் போக்குவரத்து அண்ணா தொழிற்சங்கத் தொழிலாளர்களும் ஏராளமான பொங்கல் வாழ்த்துக்களை அனுப்பி இருக்கிறார்கள்.

வாழ்த்து அனுப்பியவர்களுக்கு தனித்தனியே நன்றி தெரிவிக்க இயலாமைக்கு மன்னித்து, இதனையே நன்றியாக ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன்.

**பட்டுக்கோட்டை பாப்பையன்**
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக ஒன்றிய அமைப்பாளர்
கதர் - கிராமத் தொழில் வாரிய உறுப்பினர்

# தந்தை பெரியார் நூற்றாண்டு விழா

## திருநெல்வேலி மாவட்டம்

1979 சனவரி 20, 21-ஆம் நாட்களில்
இடம்: திருநெல்வேலி இந்துக் கல்லூரி மேல் நிலைப் பள்ளி விளையாட்டுத் திடல்

**20.1.1979**

மாலை 4.00 மணி — துவக்க இசை
மாலை 5.00 மணி — வரவேற்புரை
திரு. ஈ.வே.அ. வள்ளிமுத்து

தொடக்க உரை:
திரு. க. இராசாராம்

கருத்தரங்கம்:
தலைமை:
மாண்புமிகு வருவாய்த்துறை அமைச்சர்
திரு. எஸ்.டி. சோமசுந்தரம்
சிறப்புரை:
மாண்புமிகு கூட்டுறவுத்துறை அமைச்சர்
திரு. கே.ஏ. கிருஷ்ணசாமி

பங்கு பெறுவோர்:
திரு. கே.டி. கோசல்ராம் எம்.பி.
டாக்டர் உளுந்தூர்ப்பேட்டை சண்முகம்
பேராசிரியர் ந. இராமநாதன்
பேராசிரியர் பா. வளன் அரசு
திரு. எம்.பி. அழகியநம்பி
திரு. டி. சந்திரகாசன்
திரு. கே.ஆர்.பி. மணிமொழியன்
திரு. செங்கோட்டை வி. சனார்த்தனம்

இரவு 9.00 மணி — நாடகம்
நடிப்பிசைப் புலவர் நாடக மன்றத்தார் அளிக்கும் பேரறிஞர் அண்ணா அவர்களின் "நீதி தேவன் மயக்கம்"

**21.1.1979 இரண்டாம் நாள்**

மகளிர் அரங்கம்
காலை 9.00 மணி
வரவேற்புரை:
பேராசிரியை விமலா சாமுவேல்
தலைமை:
செல்வி சோ. பாகீரதி
(முதல்வர் குற்றாலம் பராசக்தி கல்லூரி)
தொடக்க உரை:
மாண்புமிகு கைத்தறித்துறை அமைச்சர்
திருமதி சுப்புலட்சுமி ஜெகதீசன்
சொற்பொழிவுகள்:
பேராசிரியை சரசுவதி இராமநாதன்
பேராசிரியை உமாமகேசுவரி
திருமதி தி. சுந்தராம்பாள்
திருமதி மாலதி அரிஇந்திரன்
திருமதி ஆண்டாள் ரவுத்

காலை 11.00 மணி
கவியரங்கம்
வரவேற்புரை:
திரு. பாளை. நாராயணன்
தலைமை:
கவிஞர் புலமைப் பித்தன், எம்.எல்.சி.
பங்கேற்போர்:
புலவர் ச. பாலசுந்தரம்
கவிஞர் இ. முத்துராமலிங்கம்
நாஞ்சில் நெடுமாறன்
புலவர் மீ.சே. கிரகோரி
திருமதி மனோன்மணி இரவீந்திரன்
புலவர் தளவை. முத்தரசு

மாலை: 3-00 மணி
சிறப்பு அணிவகுப்பு ஊர்வலம் பெரியார் வாழ்க்கையைச் சித்தரிக்கும் கருத்து விளக்க அலங்கார வண்டிகளுடன், என்.சி.சி. சாரணர், ஊர்க்காவல் படையினர், மகளிர் மாணவர் ஆகியோரின் அணிவகுப்பு பாளையங்கோட்டை வ.உ.சி. விளையாட்டுத் திடலிலிருந்து புறப்பட்டு, நெல்லை நகரை அடையும்.

மாலை: 6.00 மணி சிறப்புக் கூட்டம்
இடம்: சாஃப்டர் மேல்நிலைப் பள்ளித் திடல்
வரவேற்புரை:
திரு. ஆலடி அருணா, எம்.பி.
தலைமை:
டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன்
தொடக்க உரை
மாண்புமிகு உணவு அமைச்சர்
திரு. ஜி. ஆர். எட்மண்ட்

பங்கு பெறுவோர்:
வணக்கத்துக்குரிய மதுரைமாநகர் மேயர்
திரு. எஸ். முத்து
திரு. நெ.து. சுந்தரவடிவேலு
திரு. அப்துல்வகாப், எம்.எல்.சி.
திரு. சோ. அழகர்சாமி, எம்.எல்.ஏ.
திரு. ரா. கிருஷ்ணன், எம்.எல்.ஏ.
திருவாரூர் கே. தங்கராசு
திரு. கோ. கலிவரதன்
திரு. எம்.எஸ். சிவசாமி

தந்தை பெரியார் படத்திறப்பு -
விழா நிறைவுச் சொற்பொழிவு
மாண்புமிகு முதல்வர்
திரு. **எம்.ஜி. இராமச்சந்திரன்** அவர்கள்

இரா. நெடுஞ்செழியன்,
தலைவர்
பெரியார் நூற்றாண்டு விழாக்குழு

இயக்குனர்,
செய்தி—மக்கள் தொடர்புத்துறை
தமிழ்நாடு அரசு

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை 600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவிந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுவோர்: பி. தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரி சாலை, சென்னை-600004. ஆசிரியர்: எம்.ஜி.சக்ரபாணி